

உ

குமரன்றுணை.

## க. ஆண்டியப்பபிள்ளையவர்கள்,

# பிள்ளைத்தமிழ்.



### விநாயகர் துதி.

கார்கொண்டநீள்பனைக்கையடியில்வெண்கோடுகதுவிவ
ருகின்றகாட்சி, கருமுகிறவழ்ந்துவருமிருசிகரமத்தகங்கா
ணுமலையானதலைசேர்; வார்கொண்டவாயெனுமுழைக்கணே
ர்வண்பிறைதன்வாய்க்கடையெடுத்துணுழைய, மாட்டாதரா
குநிலைகாட்டுசிறுதாட்டுணைமதப்போதகத்தைநினைவாம்; ஏர்
கொண்டமாதர்தமிணைப்பெருமுலைக்கெதிரிடுந்திறனுணர்ந்து
சீறி, யீர்ங்கழுவிடப்பட்டதென்னவுமதான்றுதானிணையாக
விண்ணைநோக்கிச்; சீர்கொண்டதவசுபுரிகின்றதெனவுங்க
னகதிண்கலசமுடிகடோறும், திகழ்மனைவிளங்கிளசையாண்
டியப்பேந்திரன்செந்தமிழ்தழைத்துவரவே.

# நூல்.

# காப்புப்பருவம்.

## திருமால்துதி.

கங்கைசேர்செங்கமலமாதுதனிறந்தனிற்காத்துறையும்
வேறுபலவங், கனையரைமணந்தவள்புலந்திடில்வணங்கினின்க
னகமுலையிபமுமவர்தங்; கொங்கையிபமும்பொரச்செய்துபா
ர்த்தேனெனக்கூறுபுதிருத்தியுலகைக், கூர்ந்துநனிபூத்திடப்பு
த்திரரையீந்துகாக்குங்கருங்கொண்டல்காக்க; சிங்கநிகர்செக
வீரராமக்குமாரெட்டசீமான்மனத்துமகிழுந், திவியமதியந
திரியைமிகுபுனிதகங்கைகுலதிலகனைவிளங்குதருவை; மங்
களபுயாசலனையிங்கிதகுணாகரனைவண்குவளை மார்பமலரியை,
வரம்வேண்டினர்க்குதவிபுரியாண்டியப்பனென வருகாண்டி
பப்பதியையே. (க)

கிறம்=மார்பு. அங்கனையர்=பெண்கள். இபம்=யானை.

### வேறு.

## சிவபெருமான் பார்வதி விநாயகர் முருகக்கடவுள்துதி.

மருவிலங்கியவரியகொன்றையைமதியைநஞ்சுறவாய்ந்
திடப்பாந்தளை, மருவுகங்கையைநறியதும்பையையவளர்பெ
ருஞ்சடையீண்டவைத்தேந்துகை, மழுவொடுங்கலையணியுமி
ங்கிதவரததுங்கபதாம்புயத்தேந்தலை, மருகினன்றுளமுருகி
யன்றொருகரையிருந்தழுதேங்குநற்றோன்றலின்; இருதயங்

குளிருறநயந்தமுறுதவுமம்பிகையாங்கிரிக்கந்தையை, இணை யறுங்குடவயிறுதங்கியவிருகுறும்பதமோங்குரத்தாம்பலை,யி னியதொண்டர்தமனநினைந்தவை யெவையுமின்புறவேண்டும டடாம்படி, யெழிலொடுந்தருகுமரனம்பனையினிதிறைஞ்சிப் நாந்துதிப்பாந்தினம்; உருவிளங்கியகொடிகளும்பரிலுறநினை ந்துவிணூர்ந்திடத்தாம்பரி, யுவைநடந்திடவடிவழங்கிடுமிள மையம்பதியார்ந்துவப்பாந்திற,முரிமைகொண்டவனயமிகுந் தமிழியலனந்தமுமோர்ந்துறத்தேர்ந்தவ, னொருகணந்தனில் யமகமுந்திரிபுகளும்விண்டுசொல்மாந்தருக்காம்பொருள்;அரு ளொடுந்தருநிகரவுந்தருமதிபனண்பிடைவாஞ்சையுற் றேன் பொரு, மரசனுந்தியபெரியவெஞ்சமரழியவென் றிடுவோன் றுதித்தோன் றனை, யனுதினங்களியொடுமகிழ்ந்தருளதுலசுந் தரவாண்டியபப்பேந்திர, வபயனென் றிடுசுகுணகந்தனைநனிபு ரந்திடவேண்டிமிக்கோங்கவே. (உ)

## பிரமதேவன் தேவேந்திரன் இலக்குமி சரசுபதி சத்தமாதர் முப்பத்துமுக்கோடிதேவர்துதி.

தோட்டுக்கமலவீட்டயனுந்துதியோங்கமராபதியோனுந் துலக்குங்கருணையிலக்குமியுஞ்சொல்லாடமிழ்க்குவல்லாளு மோட்டுமயிடற்றீட்டுவளுமுன்னியருளேழ்கன்னியரு முப்புதொடுமுக்கோடியெனுமுதியவிமையவரும்புரக்க

நாட்டிற்கனகம்பெயும்புயலைநவிலும்புலவரிருநிதியை
நலஞ்சேர்கருத்தமுத்தினை றநமதுகுலசிந்தாமணியை [றை
யீட்டுங்கருணைப்பெருங்கடலையினியதருவைக்குணக்குன்
யிளைசைமதிமந்திரியைவரமிசையாண்டியப்பதேனுவையே. ()

முதலாவது காப்புப்பருவம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௪.

---

## ௨-வது செங்கீரைப்பருவம்.

---

நினதுமுகமதியினைக்கண்டகைப்பங்கயநிகழ்ந்திதுவலிந்துதழுவ,நேர்ந்தருகெழுந்துவந்ததுநம்பதிப்பரிதிநேசமனமுன்னியோநம்; மனநிலைமைகண்டோவலாதினிக்காணவோமழவுடையசோதிமுடிமேல்,வதிமகிமையாலஞ்சியோதடைபுரிந்திடவும்வந்ததிலையாதுபுரிவோம்; எனநனிநினைந்தஃதினைதிருமுமற்றிருமியேங்கிநிலமீதுகுப்புற், றிருந்தனவெனப்பாணியூன்றிமுகமாடவொரெழிற்பதமிதித்திருந்து; தினகரனுமோடிவலம்வருமிளசையூரனேசெங்கீரையாடியருளே, திகழ்பாண்டியற்குநிகர் புகழாண்டியப்பமுகில் செங்கீரையாடியருளே. (௧)

ஒருமானையேந்திவருபெருமானொடேடுபுநிலுமையவடனக்குவேட்கை, யொடுநினதுமேனிசெம்பாதிதந்ததுமன்றி

யோவாதவட்குவெருவி; மருமாலைவேணிகொண்டென்னையு
மொழித்துநிதம்வைத்தனையிதென்னவவள்பான், மருவுபோ
வென்றுசினமுறுபோதெனுசைமடமங்கையேநின்னையென்
னே;டிருமாநிலத்தவளுமேசுமந்திடவுமேலேற்றமுறுபவளுநீ
யே, யென்பதுதெரிந்திடவுமன்றேபுரிந்ததவிரண்டுமென
வூடல்போய்மு; திருமாதரத்தினணைகங்கைகுலசேகராசெங்
கீரையாடியருளே, திகழ்பாண்டியற்குநிகர்புகழாண்டியப்
பழநில்செங்கீரையாடியருளே. (உ)

ஆவலொடும்பலபண்பயிறும்பிகளங்கோலஞ்சார
வங்கைவிலுங்கொடுவந்தமதன்றனையங்கோலஞ்சார
மாவிழிபால்வெலுவோர்பதமாபதுமந்தானங்கோடி
வாடியுநேடியமாறுதிமாதருமந்தானங்கோடி
யேவளரப்புகழ்சூழிளசைப்பதியின்பாலன்பார்வை
யென்றவர்தங்களைநன்றுபுரந்துமையின்பாலன்பார்வை
தேவமுதாங்கருணைநிதிபெற்றவசெங்கோசெங்கீரை
தேர்ந்துரையாண்டியப்பேந்திரவுத்தமசெங்கோசெங்கீரை.()

அங்கோலஞ்சார=அழகிய அம்பு ஐந்து பொருந்த, அங்குஓல மிட. மா விழியால் வெலுவோர்=அழகிய நெற்றிக்கண்ணுல் வெல்லும் சிவபிரானது. பதமாபதுமந்தான்=திருவடியாகிய சிறந்த தாமரையை. அங்கு ஓடி வாடியும்நேடியமால்=அவண் ஓடிவருந்தித்தேடியவிட்டுணு. தாதிமாதருமம் தானம்=புகழும் பெரிய தருமமும் தானமும். இளசைப்பதியின்பால் அன்பு ஆர்வை=இள

சைநகரில் அன்பு நிறைந்தாய். உமையின்பாலன் பார்வை=பார்வதிபுத்திரனான குமாரக்கடவுளது கடாட்சம்.

செங்கீரைப்பருவம்முற்றிற்று.

ஆகப்பருவம் உ-க்கு பாட்டு எ.

---

# ௩-வது தாலப்பருவம்.

---

கந்தமுறுதண்பொதும்பரளிக்காடும்புயலுந்துணையெனநீங், காதுசேர்த்துப்பொருவதனைக்காணூஉமதுவைச்சிறையிருக்க; வந்தபுயலைச்சஞ்சலமேமருவப்பசும்பொங்கருமலைந்து, வணங்கிநிதங்காவெனத்திறையாமலருமளித்துக்கண்ணீரைச்; சிந்தியிரங்கப்புரிகுழலிற்சேர்ந்தார்களைங்தைந்தருவினிடைச், சிறுமாமகளிர்வீசுமதைத்தேவர்புலவிமாதருக்குத், தந்துபுணர்ந்துபுகழிளசைத்தானாபதியேதாலேலோ, சகத்தினுயராண்டியப்பபுரந்தரனேதாலோதாலேலோ. (க)

பொதும்பர்=சோலை. சிறை=இறகு, சிறைச்சாலை. சஞ்சலம்=மின்னல், துன்பம். கா=சோலை, காப்பாற்று. கண்ணீர்=தேனாகியநீர், கண்ணீர்.

நவிலுந்துகிலமருங்கொடிக்கணங்தேமடவார்மருங்கொடிக்க
நாட்டுமாகமுகிலையுறநணுகிமாகமுகிலையுற
அவிர்தேனுவின்வானரம்பாயதறுந்துவிழவானரம்பாயு

அரியை விலகா வணங்குலவவமையுமலர்க்காவணங்குலவத்
திவள்மாதருக்குச்சந்தோடத்தேன்மாதருக்குச்சந்தோடத்
திருவாய்வனசத்திரந்தழைக்கத்திரண்டுணனசத் திரந்தழைக்
தவழும்புகழ்செய்வளத்திளசைத்தாளுபதியேதாலேலோ [கத்
சகத்திலுயராண்டியப்பபுரந்தரனேதாலோதாலேலோ. (உ)

துகிலமரும் கொடிக்கணம் தேமடவார் மருங்குஒடிக்க—சீலை பொருந்திய கொடியினம் தெய்வப்பெண்களின் இடையை ஒடிக்க. மாகமுகிலை—ஆகாயத்தின் மேகத்தை. மா கமுகுஇலைஉற—அழகியகமுகின் இலைமேவ. தேனுவின் வால் நரம்பு ஆயது—காமதேனுவின் வால் நரம்பானது. வானரம்பாய—குரங்குகள் தாவ. அரியை விலகா அணங்கு—விட்டுணுவை விலகாத இலக்குமி. மாதருக்குச்சந்தோடத்தேன்—சிறந்த களிப்பும் சந்தோஷமுமுள்ள தேன்வண்டு. மாதருக்குச்சந்தோட—பெண்கட்குத் தூது போக. திருவாய் வனசத்து இரந்து அழைக்கத் திரண்டு உண் அன சத்திரம்தழைக்க—அழகிய வாயாகிய தாமரையால் பணிந்து அழைக்க (விருந்தினர்) திரண்டு அருந்துகின்ற அன்னசத்திரம் செழிக்க.

தங்கமணிச்சிகரமணைமேற்றங்கவிளங்கியெங்கணுநித்
தங்கதிரைவீசப்பெயர்மாதங்கமெனக்கொண்டதற்கேற்பத்
தங்கள்கரியநிறத்தைவிடுத்தங்கமுழுதுஞ்சேர்ந்திருதந்
தங்கவினும்பல்லியங்கள்மிகுந்தங்கணுலவுமிளசையின்முச்
சங்கமகிழ்ந்துபுகழுமிரசங்கனியமுத்தமிழ்கள்பிர
சங்கமியுற்றுங்கருத்தமுத்துச்சங்கநிதிபாலுதித்துமுக்கட்

சங்கரனைப்போற்றிப்பணியுந்தாணுபதியேதாலேலோ
சகத்திலுயராண்டியப்பபுரந்தரனேதாலோதாலேலோ. (௩)

தாலப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் ௩-க்குப்பாட்டு ௧௦.

---

## ௪-வது சப்பாணிப்பருவம்.

---

வானகமடுத்தலாலெழுதுளியமைந்ததான்மணியாழியுற்ற விரலான், மன்னிலவணக்கமிகவாங்கிடக்கும்பிடுவதாற்கனக மின்னிவரலாற்;பூணலங்காட்டலாலுறுதியாகத்திற்பொலிந்திடுதலாலுமுன்கை, போன்றனமெனக்கருவமேவியெதிரிட்டிடுபுயற்குழாமுழுதும்வெருவ;வேனலமரப்படுதியார்க்குமிடிதரு நீயெமிணையோவெனச்சீறியே, யிதுபொருத்தனமினிச்செல்லெனச்சொற்றிடவெடுத்திருகைகொட்டுவதுபோற்; ஞானிகரெட்டபுரம் வளராண்டியப்பமுகில் சப்பாணிகொட்டியருளே, தப்பாதுதுட்டர்களையெப்போதும்வெட்டுபவசப்பாணி கொட்டியருளே. (௧)

வானகமடுத்தலால்=வெள்ளிய நகம்பொருந்தலால், மேலிடத்தில் நிறைந்திருத்தலால். எழுதுளி=எழுத்தாணி, எழுகின்ற நீர்த்திவலை. மணியாழி=இரத்தினமோதிரம், அழகியகடல். விரல்=கைவிரல், வலி. மன்னிலவணக்கம்=நிலைபெற்ற உலகத்தார் வணக்கத்தை, பொருந்தி உப்புநீரை. கும்பிடுவதால்=அஞ்சலி

த்தலால், கூட்டமிடுவதால். கனகம்=பொன், கல்மலை. பூ=மலர், பூமி; உறுதியாகம்=மிக்ககொடை, பயன்றரும் யாகம். ஆர்க்குமிடி=யாவர்க்கும் வறுமை, முழங்கும் இடி. செல்=போ, மேகம்.

அரியசிறு நான்மருங்கலர்செவ்வரியினம்பகமுறக்கு
ழாநின், னருட்டேன்மணத்திடுமுகத்தாமரைப்போதவாவிப்
பராவிளாவித்; தருமிச்சிலாக்காதுகைதட்டியோச்சிடு தற
ணையொப்பவும்பன்மடவார், சந்தமிகுபுருடர்கண்வழுக்கிடா
திட்டகற்றங்கிளங்கொங்கைமலையில்; ஒருமூச்சுறப்புரிந்தா
லுஞ்சிவக்குநினைதொண்டைகொடுதாடனஞ்செய், துறுங்கா
ல்வருந்துமென்றஞ்சுபுபழக்கமிடலொப்பவுமுடுக்கையேந்துஞ்
சருமதரனைத்துதிசெயாண்டியப்பேந்திரா சப்பாணிகொட்டி
யருளே, தப்பாறுதுட்டர்களையெப்போதும்வெட்டுபவசப்
பாணிகொட்டியருளே. (௨)

வேறு.

கந்தமலிந்தபசுந்துழலம்பிகைகட்டியிருப்பாணி
கல்லவும்வல்லவெமுள்ளமுவந்துதிகட்டியிருப்பாணி
வந்தசயாபதிதன்னிருகொங்கையமட்டுமருப்பாணி
மலநெடுகந்தனையருளொடுதந்தவண்மட்டுமருப்பாணி
இந்துபுனைந்தவனோடுசுமந்திடவிட்டதிருப்பாணி
யென்றகுலந்தனில்வந்தவதானமவிட்டதிருப்பாணி

கொந்திதழம்புயம்வென்றிகொளும்படிகொட்டுகசப்பாணி
கொங்கிளசைப்பதியாண்டியப்பேந்திரகொட்டுகசப்பாணி. ()

கல்ல=தோண்ட. கொங்கை அமட்டும் மருப்பு ஆள் நிமலன்=தனங்கள் அச்சுறுத்தும் தந்தத்தை ஆளுகின்ற விநாயகர். மட்டு மரு பாணி=தேன்போல் மணக்கும் பண்ணையுடைய உமை. சுமந்திட இட்ட திரு பாணி=சுமக்கவைத்த சிறப்புற்ற கங்கை. திருப்பாணி=தானலட்சுமிவசிக்கும் கை.

சப்பாணிப்பருவமுற்றிற்று.
ஆகப்பருவம் ச-க்குப்பாட்டு கரு.

---

# ரு-வது முத்தப்பருவம்.

---

சந்தமடமாதரைமேடைத்தலத்துத்தரிசித்தரிமயங்கித்
தாரையிமையாதாயிரம்பெற்றதிலைமகிழ்கூர்ந்தருகுறுங்காற்
கந்தமலிபக்கனைந்துலர்செங்களபக்குவியல்மருடவலங்
காரத்துரைமார்செலுத்துபரிக்காலிற் பொடிபட்டெழுந்துமி
ருந்தவருகற்பனைப்போற்கனுறுத்திபிவராவின்றமக் [ஞெ
குளதுமிழுங்கோமென்றவன்வீழ்ந்தோடமுடுக்குமிளசையிற்
முந்துங்கருத்தமுத்தீன்றமுத்தேமுத்தந்தருகவே [சீர்
மூண்டசமர்வெலாண்டியப்பமுதல்வாமுத்தந்தருகவே. (க)

அரி=இந்திரன். தாரை=விழி.

கொத்துமலர்க்கான்வீசியண்டகூடத்துவரைநீண்டிடுகாக்
கொண்மூநிகரப்பொழிமதுவாற்குலவோராழித்தேருமதிற்
றத்துபரியுமவைகடவத்தகுவலவனுந்தானுநனை
தரவும்பலவீமொய்த்திடவஞ்சகிக்கமுடியாதனுதினமுங்
கத்துங்கடலிலவைமுழுதுங்கழுவிமுழுகிப்பரிதிவரக்
காணுமிளசைமாநகரைக்காக்குமமைச்சனேமடவார்
முத்தம்பதிக்குமுத்தநகைமுகிழ்வாய்முத்தந்தருகவே
மூண்டசமர்வெலாண்டியப்பமுதல்வாமுத்தந்தருகவே. (௨)

வேறு.

மெல்லியரிடம்போர்புரிந்திடுமதன்றனிடம்வெஞ்சினம்
வளர்ந்துகணையாய், மேவுமலரிற்சிலபறித்துக்கொடுந்திறம்வி
ளைக்குமஃதொன்றையுந்தன், வல்லபுயமாலையாய்ப்புல்லியின்
புதவியிடுமாறுநனிசெய்துமற்றை, வார்கணையைநீளணைபரப்
பிக்கசங்கமடமாதரையழைத்துமுலைமே; னல்லகொடைகற்
றகைபுனைந்தகரமும்பருகிநன்குபலகோடிகரணம், நடத்திச்சு
கத்தினையளித்துத்திருந்தின்பநரலையுறு போதுமொருபொய்;
சொல்லியறியாதசெந்தமிழமுதமூற்றுசெந்துவர்வாயின்முத்
தமருளே, துரையார்கள்மெச்சிளசைவளராண்டியப்பசெந்
துவர்வாயின்முத்தமருளே. (௩)

முத்தப்பருவம்முற்றிற்று.

ஆகப்பருவம் ௫-க்குப்பாட்டு ௧௫.

# ௬-வது வருகைப்பருவம்.

தேனாறுபாயவளமுறுமருதமென்னுந்திறற்பெருங்காவலாளி, செம்பொனுலகுக்குமேலுஞ்செலவளர்த்திடுசெழுங்காவிநேரொடெதிர்த்து; வானாறுகற்பமத்தேனால்வளர்ந்துவருவதுகண்டுசீறியந்த, மன்னவனெடுத்துவாள்வீசிக்குறைத்திடுதன்மானவெடிகொண்டவாளை; கோனாறுமைந்தருக்கொம்பைமுறித்துமிக்குவ்விலுறவீழ்த்திவந்து, கோடிதரமெதிர்நோக்குபெடையொடுகலந்துசெங்கோகனகமீதுதூங்கத்; தானாறு நாலிசைமுழக்கிளசை யூரவதரித்தபுகழோன்வருகவே, தாண்டுபரிதாண்டுதிறலாண்டியப்பேந்திரவுதாரமகவான்வருகவே. (௧)

வேறு.

விரியுமலையைமேலாக்கிமீறுமலையைக்கீழாக்கி, வீறுதணித்தகரமுனிவன்மிகப்பாரிகழுங்குறள்வடிவ; மொருவிவிடங்கமேனியொடுமுதித்தானெனவும்வாணிமட, முறுபெனுருநீத்தாண்மைகொடுமுதித்தானெனவும்புகழ்ந்துதினம்; நரர்கொண்டாடுஞ்சிவகாமிநாதகவிஞனெனுமெழுதி, நாட்டிற்சிறந்தவளத்திளைசைநகரிற்பிறந்தபெருந்தமிழா,கரனுங்கருத்தமுத்தீன்றகனியேவருகவருகவே, காரார்கொடையாண்டியப்பவுபகாரராவருகவருகவே. (௨)

தாராவு முங்கொண்டருள்புரியுதாராவருகதசரதசீ
தாராமனைப்போலுதித்தவவதாராவருகநினதுமுக
தாராபதிகண்டலர்குவளைத்தாராவருககவிஞருக்கா
தாராவருகமணஞ்செயிருதாராவருகவுலுத்தர்களைங்
காராவருகதிவியவலங்காராவருகவிளைசையிற்சிங்
காராவருகதெவைப்புரிசங்காராவருகநீதிவிப
காராவருகவமைச்சினதிகாராவருகவருகவே
காரார்கோடையாண்டியப்பவுபகாராவருகவருகவே. (௯)

வருகைப்பருவம் முற்றிற்று.
ஆகப்பருவம் ௬-க்குப்பாட்டு ௬௰.

## ௭-வது அம்புலிப்பருவம்.

குணக்கட்லுதிக்குமதியோனருந்தமிழ்தினங்கொள்பவன்று ரையருளோன், கூடியகலாநிதியனென்றனையுமோதலாற் கோவாந்தனக்குநிகரா; மணத்தவனெனக்கணியமைத்தன னதன்றியுன்மாட்டுறுநிலாக்கதிரையும், வருநினதுசிறுமை யொடுநீகலகமேசூழவந்துபயமேவுதலுமிக்; கணத்துறத்திரு வுளத்தெந்தையுணராமையுன்கண்ணுற்றயோகமேகாண், கன கநாட்டும்புகழ்விதைத்திடவுழுந்தகைமைகாணமேழித்துவசு ம்வின், அணைக்கரமெடுத்துயர்த்திடுமிளசையூரனுடனம்புலீ

யாடவாவே, அத்தனருள்பெருகாண்டியப்பமுகிலுடன்வே ண்டியம்புலீயாடவாவே. (க)

குணக்கடல்—கீழ்கடல், குணாகரம். அருந்தமிழ் தினங்கொள்பவன்—அருந்துகின்ற அமுது இன்னங்கொள்பவன், அரியதமிழ்தினங்கொள்பவன். தாரையருளோன்—நட்சத்திரங்களையுள்ளவன், கண்ணருளுள்ளவன். நிலாக்கதிர்—நிலாவொளி, நில்லாக்கதிர். சிறுமை—சிறியகளங்கம். கலகம்—மலையிடம். பயம்—கடல்நீர்.

இரவோனெனத்திரிதியாதலாலுன்றனக்கேற்றனவளிக்கவலவோ, வின்றுநன்றன்போடழைத்தனனதுணராதெழிற்றிருமுகத்தெதிரியாய்; வரலாலழைத்துநமையுந்துன்பியற்றியிடுவாரனென்றுவந்திலாய்நீ,வள்ளன்மைபெற்றவிவனுள்ளன்மைதேர்கிலாய்மருவார்களென்றுநினையான் ; தருமிடத்தன்றியுங்கலைவாணனுமுனைத்தான்மிகமகிழ்ந்துதரவேவார், தடையும்வாராதுனையழைத்தகரமேதருத்தானென விமைக்குமின்னம், அரகராதாமிதமெனுமிளசையூரனுடனம்புலீயாடவாவே,அத்தனருள்பெருகாண்டியப்பமுகிலுடன்வேண்டியம்புலீயாடவாவே. (உ)

வந்திலாயென்றிவனுனைச்சினந்திடுபோதெம்வள்ளலேநீகையாலும், வாயாலுமேகசாலத்தழைத்திட்டதையிவண்சொந்தவாம்பன்மாதும், கந்தமுறுசெங்கமலமென்னவருபுதி

பவோர்களவுப்புணர்ச்சிமாதுங், காணவெளியாயுமறைவாயு நமையினைறழைக்கவுமானதிவரிலெவர்டார்; சிந்தனையுடன் சேர்வமென்றுதெளியாதுவந்திலனென்றுகோடிகோடி,செய் பியிதுகாறுமேதப்புளித்தனமினிச்சிறிது நீதாழ்க்கின்றே, அந்தரமடைந்திடுதிதிண்ணமிளைசைச்சுகனெடம்புலீயாடவா வே, அத்தனருள்பெருகாண்டியப்பமுகிலுடன்வேண்டியம் புலீயாடவாவே. (௯)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் ௭-க்குப்பாட்டு ௨௨.

---

# ௮-வது சிற்றிற்பருவம்.

---

**புதிதாவிருந்துசமைத்துணையன்பொடுவந்தழைக்கப்போ வமென்று, புந்திநினைந்தோமதற்குமுனம்போந்தாய்வலியமி கமகிழ்ந்தாய்; அதுநீயுணராதெஞ்சிறுவீடழிக்கமுயன்று யழிக்கினுநின், னருமைக்கருணைமாதாநீராட்டிச்சதங்கை சிலம்புதண்டை; பதுமக்கரத்தால்வனைந்திடுநின்பதத்திற்படி ந்தபுழுதியினைப், பணிந்துவிழிநீருகுத்தாட்டிப்பரிந்துகழுவு வோமலது; கதுவச்சினந்தியாதுசெயக்கடவோஞ்சிற்றில்சி தையேலே, காண்டீபனுநேராண்டியப்பகனியேசிற்றில்சிதை யேலே. (௧)**

திருமால்வெங்கடேசுரெட்டசெல்லமகராசேந்திரனைத்,
தினையும்வணங்காரகமோவிச்சிறியேமிழைத்தசிறுவீடு;தருமா
மணியேயஃதிலையேற்சாற்றுமவனெங்கற்பினகந்,தனைநேற்ற
ழிக்கப்பவனியெழுந்ததுபோலின்றுமுனதிடத்துப்; பெருவீ
தியில்யாம்புரிந்திடுகற்பினகந்தனையுமழித்திடற்குப், பெரிது
த்தரவுங்கொடுத்தனளேபெண்கட்கிரங்கிநீகூடக்; கருணைபு
ரியாதிருக்கிலெவர்காப்பார்சிற்றில்சிதையேலே, காண்டீபனு
நேராண்டியப்பகனியேசிற்றில்சிதையேலே. (௨)

இனியநேயமிகுதியினாலிங்குநினைக்கண்டெழுந்திருந்தோ,
மில்லைமதற்கெம்விளையாட்டினில்லையில்லையெனப்புரிதன்;
மனுநீதியதோவிதற்கோநின்வரவையெதிர்பார்த்திருந்தோஞ்
சொல், வரனார்தலையிலிருந்தபுனன்மடமான்றலையிலிருந்தம
லர்ப்; பனியின்பகைவன்மனைதலையிற்பதிவாயிருந்தவோரிர
ண்டு, பாவையருஞ்சூழ்மேவியிருபகுதிப்பொருளுமிகுதியு
றக்;கனிவாய்வளர்க்குமிளசையலங்காராசிற்றில்சிதையேலே
காண்டீபனுநேராண்டியப்பகனியேசிற்றில்சிதையேலே.(௩)

சிற்றிற்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் ௮-க்குப்பாட்டு ௨௫,



# ௯-வது சிறுபறைப்பருவம்.

---

தெண்டிரைமுழங்குவதெனத்தமிழ்ச்சங்கந்திரண்டுகளி
கொடுமுழக்கச், சிங்கமென்முழங்குவதெனச்செயச்சங்கஞ்செ
ழித்துவிசெறிந்துமுழக்கக்; கொண்டல்கண்முழங்குவதெனப்
பொளின்சங்கங்குனித்துவாழ்க்தொலிமுழக்கக், குலவுமணி
மும்முரசுமதிர்பெறமுழக்கிபிடுகோலமுறுமிளசைநகர் வாழ்;
வண்டிசைமுழக்கவருதண்குவளைமார்பனைவண்புகழ்முழக்கு
மதுலா,வார்கழல்முழக்குபதபங்கயவரோதயாவலமேருமெலி
வேறமுன்; செண்டொடுமுழக்குதல்செயாண்டியப்பேந்த்ர
முகில்சிறுபறைமுழக்கியருளே, திங்களொடுதங்கிவருகங்கை
குலதுங்கதரசிறுபறைமுழக்கியருளே. (க)

ஓராயிரம்படப்பாந்தளிலுறங்கிபிடுமூர்தியைநடாத்துமே
கற், குற்றந்தேர்சுற்றுதிருவாடையையெடுத்துண்டுமிழ்ந்தமு
னிவாழுமலைமே; னேராயெழுந்துவடதிக்கோடிரதமேறிநீள்
கதிர்க்கவிகையதனை, நித்தலுமலர்ச்சோலையுட்கவிகையாலுற
நெருக்கிப்பிடித்துமுன்னு; ளோரானகுருதேவிதன்னைப்புணர்
ந்தபவமிங்ஙனமடுத்ததெனவே, யிருக்கிப்பிழிந்தமுதெடுத்து
மந்திக்குமுதலீந்துண்டுகூடிமகிழ்கூர்; சீராருமிளசைநகரா
ண்டியப்பேந்த்ரமுகில்சிறுபறைமுழக்கியருளே, திங்களொடு
தங்கிவருகங்கைகுலதுங்கதரசிறுபறைமுழக்கியருளே. (௨)

இங்கிதமாறு இங்கிதமாறு எங்கணுமானவனே
இன்பசுபாலா இன்பசுபாலா எங்கணுமானவனே
சங்கமதுரையே சங்கமதுரையே தருமதுரந்தரனே
தந்திரனேயா தந்திரனேயா தருமதுரந்தரனே
அங்கவித்தாரா அங்கவித்தாரா அண்டரையே பொருவாய்
அமைச்சதிகாரா அமைச்சதிகாரா அண்டரையே பொருவாய்
கொங்குறுதிண்புயவாண்டியப்பேந்திர கொட்டுகசிறுபறையே
கொட்டமிரும்பரி கட்டிநடத்துவ கொட்டுகசிறுபறையே. (௯)

இங்கிதமாறு இங்கிதமாறு=இவண் இசம்மாறாத சந்தோஷத்தை யுடைய பாண்டியனே. எங்கணுமானவனே=எவ்விடத்தும் பெருமை பெற்றவனே. இன்பசுபாலா இன்பசுபாலா=இனியபசுக்களைக் காப்பவனே, இன்பத்தைத்தரும் நற்குமாரனே. எங்கணுமானவனே=எமது கண்ணையும் ஒத்தவனே. சங்கமதுரையே சங்கமதுரையே=(தமிழ்ச்) சங்கமிருந்த மதுரையையேசேர்ந்த தலைவனே. தருமதுரந்தரனே=தருமரக்ஷகனே. தந்திரனேயா தந்திரனேயா=வஞ்சம்பொருந்தாத நூல்களிடத்துஅன்புற்றவனே. தருமதுரந்தரனே=கற்பதருவின் இனிமைக்குஒப்புற்றவனே. அங்கவித்தாரா=சேனைகளின் பெருக்கமுடையாய். அம்கவித்தாரா=அழகிய பாமாலையுடையாய். அண்டரையே பொருவாய்=பகைவர்களைச் சமர்செய்பவனே. அமைச்சதிகாரா=மந்திரியுத்யோக முடையாய். அமைச்சதிக்ஆரா=அமைத்த திகாந்தங்களிலிருந்து (திறையாக

வருகின்ற) முத்துமாலைகளையுடையாய். அண்டர் ஐயே பொருவாய்=தேவர்களரசனான இந்திரனையொத்தவா. எ. று.

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் கூ-க்குப்பாட்டு உஅ.

---

# ௰-வது சிறுதேர்ப்பருவம்.

---

வாரிதி முகட்டிடை யெழுந்திருள் குடித்தொளிரு வான்பரிதி வரவுமவனை, மணிமகுட னையெங்கள் வேள்குமா ரெட்டதுரை மகிபனனு தேரினெதிராய்; ஆரிவனொ ராழிரத மேறிவர லென்றுசின மாகித் துசக்கழைகளால், அங்கமுழு வதுமிரத் தங்கொப்பு ளிக்கவுமெ யலமந்து சேந்துவெண் றித்;தாரியலும் வாசிரத முருளப்பு ரண்டுவலி தாங்கமுடி யாதுபுனலிற், றங்கவு நினைந்துவரி சூழ்கிட வடித்துநித் தமுமுடுக் கிளைசை நகர்வாழ்; சீரியனு முக்யமந் திரியாண்டி யப்பமுகில் சிறுதேரு ருட்டியருளே, திருநா விரட்டியரை யழகான் மருட்டுபவ சிறுதே ருருட்டியருளே.

விரதமார்க் கண்டனுங் கண்டதிச யித்துற வியந்துதுதி கூறுமாறு,மேதினியி லாகம விதிப்படி நடந்திடு விவேகமணி யாகவருமென்; சரதசண் முகபதிபி ஞேனென வுதித்தெ

வர் தமக்குமுன் னோனுமான, சரசரஞ் சிதசுகுணா சமுகசோ
லாகலவி தரணாகர கமலகருணா ; வரதசுக மதுரவசனா
மிர்தகிர் பாகரகு வையபரி பாலதிலக, மகிபசற் சனதாரந் தர
விசைய கெம்பீர பங்கஜ விலாசசுகவை ; சிரதர வெங்கிருத பு
கழாண்டி யப்பமுகில் சிறுதே ருருட்டியருளே, திருநா விரட்
டியரை யழகான் மருட்டிபவ சிறுதே ருருட்டியருளே.

சந்தமுறு செகவீர ராமக் குமாரெட்ட தளதுரையும்
வாழுமகிமைத், தானை தீப்பெருமை பெறுநீயும் வாழுநீ தா
ன்பெறும காருமவாழ ; வந்துவளை நின்றமரும் வாழுநின்
பெருநிதியும் வாழுநின் கொடையும்வாழ, வாய்ந்தநீ டாட்சி
சுந்தரமெனுநின் மருமானும் வாழவவ னேறுமதுரச் ; சுந்
தரமி குந்தமிழும் வாழுநின் னேயந் துலங்கவரு வோருமி
வாழத், துதிபெறுநின் னிளைசநக ரமும்வாழ நம்மையுந் தொ
ண்டுகொளும் வேலர்கருணைச் ; செந்திருவும் வாழவளர் புக
ழாண்டி யப்பமுகில் சிறுதே ருருட்டியருளே, திருநா விரட்
டியரை யழகான் மருட்டுபவ சிறுதே ருருட்டியருளே. (௰)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் 10-க்குச் செய்யுள் ௱௧.

பிள்ளைத்தமிழ் முற்றிற்று.



உ

குமரன் துணை.

க. ஆண்டியப்பபிள்ளை

அவர்கள் மீது

# உதாரசோதனைமஞ்சரி.

## காப்பு.

ஈதனைப்பேறாற் றாண்டியப்ப நம்பதிமேன் மிக்ககொடைச்
சோதனைப்பா மஞ்சரியுஞ் சொல்லிடவே—சீதவொளி
கக்குஞ் சரமெனக்குக் காப்புறுமே யீன்றமத்த
கக்குஞ் சரமெனக்குக் காப்பு.

## நூல்.

கங்கையணிசடைப்பெருமான்கண்மணியென்பதுதேற்
றக்கண்ணிற்றோன்றிச், செங்கையணிபெறப்பனிருதொகை
யாக்கொண்டின்னமுமோர்திணையுந்தாழாக், கொங்கையணி
மலையமலைகொடுத்தசுவைப்பாலையவாக்கொண்டுண்டென்று
ஞ், சங்கையணியவர்க்கொழித்தெனிருதயத்திலிருந்தருளுந்
தனிப்பெம்மானை. (க)

பொருந்தாகமறக்கொடிக்குப்பகிர்ந்தவனைவென்றமதன் புகழ்ச்சிராம்பல், முருந்தாகமறத்திவிளையாடுசெவிவளையா வென்மோகமான்செய், விருந்தாகமறக்கமுடியாததினைமாவருளவிரைந்துவாங்கிப், பெருந்தாகமறக்கனிவாயுறக்கனிவாயருந்தவந்தபிரியத்தானை. (௨)

மயங்கடம்பமாதிபுரிமாதரையவாவிகிதிவழங்கிப்பூம்பங், கயங்கடம்பமாருமதிக்கடவுள்வணக்கஞ்செய்முலைக்கயங் கட்கிந்தப், புயங்கடம்பமாகவுஞ்செய்புல்லறிவுளேன்றவறம் பொறுத்தாண்டேகித், தியங்கடம்பமாலிகைசேர்த்தியதிருத் தோளிலங்கவருஞ்செவ்வியானை. (௩)

பத்துருக்கந்தனைப்பொருந்திப்பாவியெனச்செனித்திலங் கைப்பதிவாழ்ந்தோன்மார், பத்துருக்கந்தனைத்துமொல்லா கவுஞ்செய்மான்மருகப்பரனைத்தந்நெஞ், சத்துருக்கந்தனையரி டந்தனிலுமுருமுழுக்கொடும்பாதகரைக்கொல்லுஞ், சத்துருக்கந்தனையாறுதலையானைமலைமகண்மதலையானை. (௪)

மன்மகவானவுணர்துயர்மாற்றியபேருதவியின்கைமாறு வாழைச், சென்மகவானிலங்குசசிச்சேயிழையோடெழுந்து வந்துசீராஞ்செல்வத், தன்மகவானதையுதவமணந்தானையிகழ்ந்தவர்முன்சனியென்றேறு, வன்மகவானுட்புகுந்துவருவதுபோனடத்திவருமயிலினானை. (௫)

தருவானையளித்து:ரந்தருவானைக்குறப்பெண்ணொடுந்தழைக்குந்தெய்வ, மருவானைமகளையன்றிமருவானைஞானமுழு

வைதுமிப்பாவி, கருவானையாதுறப்பகருவானையூருபுயங்களி
லுற்றுடி, ஒருவானையூர்வானை ஒருவாமலுலவாமலுலவுவானை.

அடுக்கவரங்குன்றனையுறாகண்முலைவயிற்றரொடுமமரர்
தம்மை, நடுக்கவரங்குன்றனையெனச்சூழ்ந்துவரச்செயயிரா
ஸரியென்பாற், படுக்கவரங்குன்றனையதிபவெனப்புரிகூரன்
படைச்செய்தானைக், கொடுக்கவரங்குன்றனைக்கோதில்பரங்கு
ன்றனைக்குணக்குன்றனை. (எ)

இருதயவாரிமலரிலிருத்தியருதினமுமதியென்றோது
ங்க, திருதயவரிதிரிகரன்பூற்றெடுக்குங்கவிமாலைநிகழச்சூட்
டிக், கருதயவாரினியதுணைகடவுளினியலதெனவுங்களிந்த
னேனென்பால், வருதயவாரிகபரந்துவாழ்க்கைவளர்ந்தேறிகனி
மகிழுவோனை. (அ)

திருந்தடங்காப்பேரிகைபித்திருநகரின்முழக்குதலாற்றி
னமுஞ்செந்தேன், விருந்தடங்காப்பயங்கொடருந்தாதுசுரும்
பெனவதற்குமிதுமன்போடு, பொருந்தடங்காட்டானைமுலை
ப்பூமகனுவினன்செவியைப்போக்கிச்செய்யப், பெருந்தடங்
காக்களின்மதுவண்டுனுமிளசையவதரித்தபெருமையோனை

காத்தகுலாபக்கனியாவருக்குமருடென்மலைச்சிகரத்தி
ன்மேலங், காத்தகுலாவெனமூடிமேய்புயலைவழுதிசிறைக்க
ளிடவேசோ, காத்தகுலாவைந்தருவோன்கனிவாலேபுணை.

கொடுத்தக்கணமேயக்கார், காத்தகுலாதிபனெனவேயுலகமெ
லாமேத்திடுசீர்க்கனமுள்ளோனே. (க0)

செவித்துவருநிகராதசெவ்விதழார்க்கங்கசன்யாசிப்போ
ர்க்கம்பொன், குவித்துவருநீக்கிவரையாதுபொழிபுயலெனக்
குக்குயப்பாலூட்டித், தவித்துவருங்கலைத்தவிர்க்குந்தாயை
யளித்தவனெனவுந்தரணிமீதாம், பவித்துவருங்கருத்தமுத்
துப்பாவலன்பாற்சண்முகன்பின்பாவுற்றோனே. (கக)

வன்னகவிராயவிதழ்வாணிசதவுருவெடுத்துவரைசெயா
ணி, முன்னகவிராயசஞ்செய்திடவரினுந்தோலாதமுதமேயெ
ன்னுஞ், சொன்னகவிராயகவிசொலிபலதானம்புரிவித்துவா
ன்கடெய்வ, மன்னகவிராயநெல்லையப்பமகராஜன்றனையங்
கொண்டோனே. (கஉ)

அரவசனம்புரிதேரையாகவறுமையிலுழலுமவரைத்தா
ளுத், தரவசனன்குறுதனதனுக்கவுநோக்குங்கருணைத்தடங்
கணாளா, வரவசனன்புறுமடியார்மலரடியைமறவாதமனத்த
னேம, தூரவசனங்கடலினமுறுங்கசக்கவந்திடுசெந்துவர்வா
யோனே. (கங)

இலகடிதமுடியணியாதெதிர்த்தவரினுடலினிடையெழு
ம்பேய்நாயின், வலகடிதங்கிடச்செயவில்வளைத்துமிருபுயத்
தானேமருமானேபொய், யலகடிதங்கனுப்புவனிவேண்டுவ

கேள்வருந்தேகலென்றளியையனுக்குப், பலகடிதமருமைமிகப்
பாராட்டியெழுதியகைப்பதுமத்தானே. (கச)

கருநாணையேற்றிமலர்க்கணைதொடுத்துமாரன்மயக்கஞ்
செய்மாதர், பெருநாணைவளையலொடும்பின்விடுத்துத்தொடு
த்துணைநாய்பிரியாநாளே, திருநாணைவுறப்பிரிநாள்வெறுநா
ளையாமதற்கெஞ்சிந்தையேத், வருநாணையெனமொழிந்துவ
ரசிதமும்புரிபெரியவனப்புள்ளோனே. (கரு)

சரசமதனைப்புளகாங்கிதமுறவேபுரியுமடந்தையர்தங்கொங்
யபரசமதனைகவிளையாடிடுவச்சிரமார்பாவவணியாள்வத் [கை
திரசமதனைகரதம்பராரஞ்சிதசுதணைசெழித்தமாடோ
கரசமதனைகருணைகரசுமுகாதுரந்தரசிங்காரயாலே. (கசு)

*பெருகுசிதம்பரவியவாபெருந்தருமபுரந்தானேபெலமா
யூர, வருமலைநீர்வளமருங்குற்றாலபராபோதுறைசைவலவி
லோதர், இருகுடந்தைவருசீரங்கமுளாயென்மாமதுரையே
வந்தோர்க்குத், தருவிபரங்குன்றனேசெந்திநகரனையனைய
தமிழ்வல்லோனே. (கஎ)

மருங்கந்தப்பாதமிலாமாசுணநேராமெனும்பூமகளிர்பா
ர்வைப், பிருங்கந்தப்பாதுணைப்போழகூருந்திருமுகச்சப்பிரம

---

*. சிதம்பரம் தருமபுரம் மாயூரம் குற்றாலம் துறைசை குடந்தை சீரங்கம் மதுரை பரங்குன்றம் செந்திநகர் என்னும் பத்து ஊர்ப்பெயர் தொனிக்கக்கூறியது.

ழூமா, அருங்கந்தப்பாகனையகவினைதபொழிந்திடுமணிமேயரு
மையாயா, வருங்கந்தப்பாவெனவுமொருபெயரிட்டழைக்கி
ன்றவரிசைசேயோனே. (கஅ)

கரவிசையாவரவிசையாகனகமகாகனகமகாகனிகைபோ
க, சுரதமனைவிரதமனைசுகமாராசுசமாராஅவாந்தமெல்லாம்
பருத்துடையாவொருத்துடையாபரவமராபரவமராப திகாக்குன்
சேய்க், குருவினவாமருவினவாகுலவரையாகுலவரையாகுந்
தோளானே. (க௯)

தாண்டியப்பராகவனமெழும்படிவெல்பரிநதுலாதனத்
திற்சந்து, வேண்டியப்பராகவனசவடியர்நாடகசமுகாவிலங்
குங்கூடற், பாண்டியப்பராகவனம்பாலுடையாதகற்றியகற்ப
கவுதார, ஆண்டியப்பராகவனரேந்திரகோலாகலவொய்யார
கோவே. (உ0)

ஒருவருடமாகநம்பால்வந்திலையெனக்கடிதபுரியேற்
கிங்கு, வொருவருடனனுப்பிவினவினதாற்கேளாதுவுஞ்சொல்
வன்பூங்காலைத், திருவருடவாரியிளித்திரைபுரியாயனுப்புக
ழத்தினநின்போலத், தருவருடங்கினவரெவரெனவிதுநாள்
மட்டிலுஞ்சோதனைசெய்தேனால். (உக)

சோதனையான்புரிந்ததையுஞ்சொல்லுவன்கேள்முதலி
லொருசவேதக்கொம்பு,நாதனையாருந்துதிக்கைபெற்றவனை
ன்பாரெனவேநான்போய்ப்பார்க்கச், சாதனையாய்வண்டருக்

கேதான்றருமந்தானமுறுதரத்தனானேன், எதனையானிடம்
பயமென்றிருதயங்கொண்டரனைமனமெண்ணினேனே. ( )

அவனையுமோர்பார்வையிலேதீயனெனமதித்துவிட்டே
னப்பாலந்தச், சிவன்மனைவியரைநோக்கியொருத்தியறக்கொ
டியாளோர்தெரிவையென்றுங், கவலையுடனேசடைவாயிருக்
குமிகுவப்பியெனக்கண்டேனுக்ரன், தவமிகுதியாகமனதைக்
கெடுப்பதற்கேவருவனெனத்தான்கண்டேனே. (௨௩)

பின்புமவன்மனைவிகொடுந்தூரியெனத்தெரிந்துவிட்
டேன்பெருமைச்செவ்வேள், என்பவனுங்களகமுளானென்
னினுமூரசத்தனென்றேயியம்பப்பெற்றான், இன்பமுறுமவ
னன்மனைவியரிலொருத்திவழுமையைவளர்த்திடவே வந்தாள்,
வன்புசெயுமொருத்திகடுங்குறத்தியெனத்தெளிந்துகொண்
டேன் மனத்திற்றானே. (௨௪)

அரிமுழக்கமடமாகிக்கடனுக்குத்தூங்கிடுவானவனி
ல்லாரில், ஒருபெண்ணென்றுஞ்செய்யாண்மற்றொருத்திசென்
மதரித்திரியென்றுற்றாய்ந்தேன், பிரமனுவியானன்
னமுமெடுப்பானவன்மனைதப்பியரைநோக்கித், திருநாமங்க
ளவாணியின்னமுமேவஞ்சனெனத்தெரிந்திட்டேனே. (௨௫)

இரதியையமதனையனுபவிப்பவளென்றோர்ந்தனன்பின்
னிலக்குமிந்த்ரன், தருவனெனச்சொலினுமிடிக்கொடியன

வன்மனைவிசயந்தனையேபெற்றாங், கரியமருந்தருந்தியொருகாசு
மிலாதிருப்பள்வடக்கதிபன்றன்னே, சரையுமனைதொறுமி
ரக்கப்பார்த்திருப்பானென்றுணர்ந்தேன்றரணிமீதே. (உசா)

வேறு.

ஐந்தருவினமுங்கற்பமென்றுரைப்பதல்லதுவாசியா
தென்றும், இந்தவான்றேனுவெதுமருளாவென்றிசைத்திட
வருமிருநிதியோர், அந்தகன்பாலேயமைந்தனபுயலுமனுதின
மின்னலைக்காட்டும், சந்திரனிரவுகொண்டவனரியாசகமுறப்
பகரெறுழுந்திரிவான். (உஎ)

வஞ்சிநாட்டரசேசேரலன்மிகுந்தவளமுறுபொன்னி
நாட்டரசே, மிஞ்சியகொடியபுலியனென்றுளும் விளங்கு
செந்தமிழ்நாட்டரசே, அஞ்சுதலைமையாக்கைதவனெனவு
மங்கையிலெனல்விபோலுணர்ந்தேன், மஞ்சுறுநினைநேர்பவரொ
வணய்ந்துவரினுமின்றிநிசமம்மா. (உஅ)

உனதகிகாரப்பெயரினைக்கதிரோனுதவியமகன்பெறுபல
னாற், றினந்தொறுங்காளேகையுமுதவித்திகழ்ந்திடுசீர்த்தி
பெற்றனனீ, தனதிருகரத்தாலெடுத்தெடுத்தெவர்க்குந்தனத்
தினைவெறுத்திடக்கொடுத்து, மனமகிழ்வதினல்வெறுக்கை
யென்றொருபேர்வழங்கினர்பொன்னினுக்கம்மா. (உகூ)

பணியெமக்கெதுசொல்லண்ணலேயென்னப்பரவிநின்
றேற்றவர்தமக்கும், அணிபிணிவிரும்பிவினவினரெனப்பூணை

ளவிலாதனகொடுத்திடுவாய், கனிவுறப்பின்னுஞ்செலவிடை
தருவாய்க்கருணையங்கண்ணனேயென்னில், தானிவுடனிடபங்
கேட்டனரெனவேயீதான்றியங்களையுநீந்திடுவாய். (௫௦)

வேறு,

நினதுபெருங்கொடைப்புகழைப்பனகத்திறையாயிரநாவா
னிகழ்த்திறனு, மனதிலொருசிறிதுமுடியாதஃதிங்கெவரிடத்
திலமையுமம்மா, வெனதுபெருமடமையினற்சோதனைசெய்
திடப்புகுந்தேனிளைசராசர், மனதுமகிழ்மதியூநியெனதா
பப்பனெனும்வரிசைமாலே, (௫௧)

உதாரசோதனைமஞ்சரி



# விசித்திர எழுத்தல்ங்காரம்.

குகவா
குலவு
குவிகை

ஏர்செய் குகவா குலவு குவிகையெனு மூன்றெழுத்தேற்ற மொழிமூன்றிலினிமார், இங்குவெறியாடலைவிரும்பிடில்வி லக்கமுதலெய்தமொழிகூறிபிடுவான், இன்றுநீவந்திடிலடுத்த மொழிகூறியிறிட்டமொழிகூறியிடுவான், இதுவன்றிமுன் சொன்னசொற்கணடுவெற்றுறைதமெனக்கருள்வையென் ன வ திலே; சேர்நடுவிலாததாற்பாடுவாணியதுஞ்சேர்த்ததனை மாலைமாற்றாச், செய்வதனியாயமதில்முதலிலாததுமெனே தே ர்ந்திலேனிறுக்கல், செய்யிக்ஷுதிற்கமுன்சொன்னமொழி மூன்றிலுஞ்சேர்கடையெழுத்தைமேவித், தென்றல்வரின்மு தலெழுத்தின்பேரொருங்குறைத்திடுவழிகளோடிவருவா ன்; வா ர்செய்நடுவில்லாதமுன்மொழியினேசைபலவாறுபுரிகுழ விதனிலும், வாய்விட்டிரங்கிபேல்விதமாந்துவாமொழிவகுக் குமலருக்குமஞ்சி, மற்றுமப்படியானகடைமொழிகள்தேடி யேமறைவாயிருப்பமென்றே, மய்யலொடுதிரிகிறுளெனதரு மையானமகள்வந்துசுகலீலைபுரிவாய்; கார்செய்கொடையுங் கடையதாகக்கொடுத்துவருகர்ணமகிபாலபூமா, கல்விக்குணத்தி பதிசெல்லச்சுவாமிமகிழ்கருணைப்ரவாகமகிபா, கருத்தினி னித்திடுதமிழ்க்கவிவிரிக்குங்கருத்தமுத்தேந்த்ர னீ ன் ற, காண்டிபாபாண்டியாதாண்டபரிதூண்டியிடுகனவாண்டிய ப் ப மணியே.

குமாரன் துரை.

# க. ஆண்டியப்பபிள்ளை

அவர்கள் மீது

# தனிக்கவிகள்.

வணக்கா வியப்ப கமடமின்றன் வருந்த வருந்தா தொழுகலையைக், கணக்கா வியப்ப முடியாமற் காமன் சாமந் தினுங்கொடுத்துக், குணக்கா வியப்ப திருப்பேரிக் குழலும் விரும்பி யணையாமா, யணக்கா வியப்ப கருங்கம்ப னனவாண் டியப்ப மாமணியே. (௧)

சுரும்பா கரும்பா வெனும்விழிக்கைத் தோகைக் கேகைத் தாயருந்தக், கரும்பா கரும்பா லமுதினுங்க சக்குஞ் சக்துஞ் சுழலுமொரு, துரும்பா கரும்பா சுகனுமெதிர்த் துவந்தா னிரங்கா யுனதுமனம், இரும்பா கரும்பா றையா சொல் லெனதாண் டியப்ப மாமணியே. (௨)

பொலங்கா தில்ஙகாத் திரங்குழலற் புதரா சிபலை மூலைக்குரல்கோ, இலங்கா திலங்கா நின்றவளை கிளிவா யுரையா மினையெவர்க்கும், கலங்கா திலங்கா முறத்தனியே கட்டு

யிருக்தி யணையரக்கர், துலங்கா திலங்கா புரியைவென்ற துரையாண் டியப்ப மாமணியே. (௩)

திருக்கு மருக்கப் பெறுகனகச் சிறியோ ரெனவே பெருமிதங்கொண், டிருக்கு மருக்கச் சஞ்பு லையி னிறுமாப் பகலும் படிசெயவோர், கருக்கு மருக்கப் பாதரவுங் கனி வாய் வருவாய் கடம்பணிப, வருக்கு மருக்கத் தாமருக்கும் வணங்காண் டியப்ப மாமணியே, (௪)

தந்தந் தந்த மென்றுபர தமுஞ்செய் தறியாள் பினும் பல்கனி, தந்தந் தந்த மென்றுகசந் தனவென் றுமிழ்ந்தாள் மயலலைமி, தந்தந் தந்த மென்றுகிலுந் தரியா தெறிவாள் குறிநடர, தந்தந் தந்த மென்றுரைச்சி தழுவாண் டியப்ப மாமணியே. (௫)

விலையா பாரி பலருலையே விரும்பி வருந்தி யிட வேசி, மனையா பாரி யெனத்தனத்தை வழங்கித் திரிவா யீதவர்வஞ்,சனையா பாரி னீதியதா தழைக்கும் புகழா வெது சொலுவாய், எனையா பாரி சாதகரு விலையாண் டியப்ப மாமணியே. (௬)

அடிக்க வடிக்கக் கரமேந்து மவர்த மாவி யனற்புழு வாத், துடிக்க வடிக்கப் பணத்திலைவி சுவரு முளரோ வுலையழைக்கும், படிக்க வடிக்கத் தலைக்குமெமைப் பரிந்து விடுத்தாள் வருவைகரும், பொடிக்க வடிக்கப் பெறுரசப்பா வுறையாண் டியப்ப மாமணியே, (௭)

கும்பஞ் சங்கங் கொம்பகையாங் குயமா மிடற்று மாதைமதன், அம்பஞ் சங்கங் கொடுங்கமுடுக் காது திரும்பா தருள்புரிவாய், கம்பஞ் சங்கங் கொடுஞ்சுமக்கும் கனமா ளிகையும் பொனுங்கவிஞர், தம்பஞ் சங்கங் கொடும்பறக்கத் தருவாண் டியப்ப மாமணியே. (அ)

விரகம் பிடிக்கும் படிதொடுத்து மிகச்சஞ் சலமே செயப்பொருவேள், துரகம் பிடிக்கு மரிக்கங்கந் தோவந் தோவந் தறுதாரீ, உரகம் பிடிக்குங் கொடியன்முத லோர்கள் மயங்க வேதரளா, கரகம் பிடிக்கு நேர்முழக்குங் கனவாண் டியப்ப மாமணியே. (௯)

மெலிய வலியத் தரும்புழுகும் விரும்பா ளரும்பா லூட்டுமொரு, மெலிய வலியத் தருங்கடனஞ் சாயுண் டுமிழ்வாள் மதனேவால், புலிய வலியத் தருஞ்சகிக்கப் போமோ விவளை யணைகவிக்கு, வலிய வலியத் தருந்தருவாய் வழங்காண் டியப்ப மாமணியே. (௧௦)

சிறிது விசனமுற்றபோது சொல்லிய கவி.

கோபமொடுங் காதலிதங் கொண்டனையேல் யானுமனத்
தாபமொடுங் காதவழி தாண்டிடுவேன்—பாபமிணங்
காதமிசை பெற்றிடுநீ கண்டறிவாய் தாமதியேன்
நீதமிசை யாண்டியப்ப னே. (௧௧)

வேழஞ் சினந்தத்து வேங்கைதருந் தோலனிவர்
எழுஞ்சி னந்தத்து வேறினதை—ஆழமுறத்
தோண்டியப்ப தாமலைசேர் தொல்புவிசீ ரோங்ஙளசை
ஆண்டியப்ப தாமலைசே ரா. (கஉ)

கதவுக்குங் கற்றானுக்குஞ் சிலேடை.

மிக்கதிறப் பாக்கலையு மேவி யடைக்கலுற்றுத்
தக்கநிலை யோடிருப்புச் சார்தலினால்—இக்கு
உதவுந் தருவென் றுரையாண்டி யப்ப
கதவுங்கற் றானுநிகர் காண். (கங)

என்றனக்கு மாதுலனீ யென்பதுபோல் நாயேனும்
உன்றனக்கு மாதுலனு வற்றிருக்கும்—நன்றுமுறை
கொண்டிருந்தோ மாதலினீ கூர்ந்துவர யாசித்தேன்
தண்டமிழ்க்கந் தப்பபுனி தா. (கச)

அகத்தியினி லெட்டை யகற்றினதி னோடு
சுகத்திலொன் றற்றதுநேர் சாற்றம்—பகத்திருடு
இல்லாத முல்லைமிசை யின்னிளசை யாண்டியப்ப
வல்லாளா வந்தணைகு வாய். (கரு)

திருநெல்வேலியிலிருந்து பரங்கிரிக்குச் செல்லும்போது
எழுதிய கவிகள்.

வானகத்தா ருஞ்சிகர வண்கயிலை போர்த்தவனைக்
கானகத்தா னைத்தசிவன் கண்ணுதித்த—மானவைவேற்

கந்தரத்து லாம்பவனி கண்டுபணி யாண்டியப்ப
கந்தரத்து ளாம்பரவா கா. (௧௬)

சிலசங் கதிசுருக்கிச் செப்புவன்கே ளென்றும்
நலசங் கதிவிருப்பி னார்க்கும்—பலநலஞ்செய்
யுந்திருப்ப ரங்கிரியா மூரினுக்கிக் கார்த்திகைநாள்
வந்திருப்ப ரங்கமெனு மால். (௧௭)

மருமானை யேத்திமுக மாநகர்க்குச் செல்வேன்
வருமானை போலவுமே மார்பி—லிருவாரந்
தாக்கவந்த வாயுவெனச் சாற்றுமொரு பேர்படைத்த
சீக்கவந்த னக்குளிருந் தேன். (௧௮)

ஆனதினா லீதுவரை யங்கிருந்தே னென்னினுநின்
மேனதினா டிப்புனைவர் வேணியமர்—வான
மதிப்பருவத் தின்வரைக்கும் வண்டமிழ்சொற் றேன்கார்
மதிப்பாருவ மிக்கவரு வாய். (௧௯)

நின்கடிதங் கண்டுமிந்த நேரம்வரை யைந்தருவின்
நன்கடிதங் கம்பரனோர் நாட்டுநினைக்—கன்பொடெழு
தாதிருந்த வம்பனுக்கோர் தாள்முகவூர்க் கீயெனகத்
தேதிருந்த வாழுமர சே. (௨௦)

### வெறிவிலக்கு வெண்பா.

காலைநடுக் கொண்டகலைக் காரிகையே கேளிரண்டு
காலைவிட்ட தாயிமைக்குக் கண்டனமென்—காலைவிரி

யாக்குவளை நோக்கினளை யாண்டியப்ப பூபதியா
லாக்குவளை நோக்கி னதை. (உக)

இதுவுமது.

அங்கசனு லஞ்சரிவை யாயினுமே வாடுவணீ
அங்கசனு லஞ்சரிவை யாயினுமே—எங்களனே
தம்பனைவா மெல்லுமன்றிக் காரிகையே யாண்டியப்ப
தம்பனைவா வென்றிடுமோ காண். (உஉ)

இதுவுமது.

சங்காரஞ் செய்வரம்பிற் றங்கிளசை மன்பகையைச்
சங்காரஞ் செய்வரம்பிற் சார்நிறத்தால்—இங்கிவளுக்
கென்பயனு மென்பயனு வேறலன்றி யாண்டியப்ப
முன்பயனு டப்புரியம் மா. (உ௩)

இதுவுமது.

தாண்டியமட் டும்பரிசூழ் தண்ணிளசைக் கண்களிக்கு
வேண்டியமட் டும்பரிசில் மேவியருள்—ஆண்டியப்பன்
தோட்டங்கை வைத்திடவோ தூங்குயிலாட் கண்ணைபுதுக்
காட்டை வெட்டி விட்டதிலென் காண். (உ௪)

கடை தலைப்பூட்டு.

இன்பங் கிடைக்குமனை யேயாண்டி யப்பமன்னுற்
முன்பங் கிடைக்குவந்த தூர்தெரிவாய்—பின்பலனுக்

கில்லாக் கமடமதி யேந்திழையே யாகார
மில்லாக் கமடமதி லென். (உ௫)

நற்றுயிரங்கல்.

வல்லிக்க லுப்புமுலை மாதுகொளச் சந்துசொலும்
செல்லிக்க லுப்புமுலை வந்நீரும்—கல்லிக்கீ
ஆண்டியப்ப னுக்குவகை யாமவற்காங் கர்வமிலே
சாண்டியப்ப வப்புவிமீ தாம். (உ௬)

தொனிப்பாடித் திரிகையெனச் சுழன்றுகய வரைத் துதித்துத் துயர்கொண் டார்க்கும், இனிப்பாடித் திரிவதிலை யெனப்பிரமா ணமுஞ்சொலுதற் கெணும்போ தென்முன், தனிப்பாடித் திரிகளைச்சேர்ந் தவன்போல்வந் ததைமறக்கத் தந்தான் கூறுச், சனிப்பாடித் திரிப்பால்முன் இலங்கை வென்ற வாண்டியப்ப தருவன் றேனே. (உ௭)

கருங்கனவி நிகருமுலை விழியர்புக ழாண்டியப்ப காமன் போல்மு, திருங்கனவி யாழனெனத் தேர்மதியு மாத யவுந் திருவும் வாணர்க், கொருங்கனவி டாய்தவிர வூட்டு மிரக் கமுமழகு முற்றி லாரை, வருங்கனவி லேனுநினைத் திடமாட்டே னினைக்கில்வரும் வாந்தி தானே. (உ௮)

சிவகாசியிலிருந்து பந்தற்கால் வேண்டுமென்று வரைந்தமைக்குப் பதில்வராமைபற்றி வதனபுரத்திலிருந்து எழுதிய கவி.

உலகாளும் வேந்தரெலாம் புகழிளசை யாண்டியப்ப வுசித ராஜ, திலகாநீ யனுப்புவதும் பலகாலே யானதினைற்

சிறிய நாளும், பலகாலுங் கேட்டலுக்க வேண்டுமென நினை
த்திருந்த பண்போ வன்றி, இலகாநின் றிடவனுப்பி யென
க்கெழுத மறந்தனையோ வியம்பு வாயே. (உகூ)

என்கூட வளையுயிரா விசைந்ததென்ற ராவணனை
யெரித்த கற்புப், பொன்கூட வளைபுனைந்த புனிதனிக ராண்
டியப்பா புகழ்நின் வீட்டின்,முன்கூட வளையின்மறந் திருந்த
குடை கொணர்ந்திலையேல் முனிந்து நின்பால், நன்கூட
வளையொடுபா லுண்டுபல மாவருவ னானுந் தானே. (௩௦)

திருநெல்வேலியிலிருந்து எழுதிய கவி.

பெரும்பார்க்கு வள்ளலெனும் பிரபலவே ளாண்டி
யப்பபிரபு தன்பாற்,சுரும்பார்க்குங் குழற்கொடியே சுகித்து
நிதம் வாழ்ந்திருப்பாய் சுகமே கொள்வாய், கரும்பார்க்கு
மேயினிக்குங் கனகமுனைக் குந்தருவான் கனியே தன்னை,
விரும்பார்க்கு மிரங்கியருள் வேந்திவன்போற் கிடையாது
விளம்புங் காலே. (௩௧)

மடந்தையலங் காரியிவள் மனம்போல வொருதினமா
வதுநீ வந்து, நடந்தையலங் கூடுவதென் னுளினுமே புரிவை
யென்ன ஞாயங் கொங்கைக்,குடந்தையல வாவுவடங் கோடி
படி ரெனத்தெரிக்குங் கோவே யிந்த, அடந்தையல ரிடத்
துவைக்க லாமாமுத் தமிழாண்டி யப்ப மாலே. (௩௨)

புகலவடங் காப்புகழைப் பெறுமிளசை யாண்டியப்ப
பூமா னென்றுப்,பகலவடங் கைக்கனந்தம் பணங்கொடுத்துச்

சேர்ந்ததையும் பார்த்துக் கொஞ்சம், இகலவடங் கொண்டு வெறுத் தீரனிவன்மே லாசைகொண்டே யின்னுங் கொங் கைச், சகலவடங் களும்பொரிய மயங்குகிறு ளிதெனதி சய மின் ஞரே. (௩௩)

வனசங்கங் கணைக்கரமே நிகருமட மாதுநின்ப வனி யைக் கண்டு, கனசங்கங் கணைப்பொழுதிற் கழலவிட்டா ளதுக் கன்னிமார் காக்குங் கோவில், முனசங்கங் கணக்கின்றி யிழக்க வுஞ்செய் தார்பினுமா மோக மீறி, மனசங்கங் கணத்திரியா துணைந்தனள்வா வாண்டியப்ப வரிசை மாலே. (௩௪)

அரும்பாயா சந்தனதா புறப்பாய்ந்து மறுபுறம்போ யகன்மி ஞட்குத், தரும்பாயா சந்தனமா பாயசமா வேனும் வெறுத் ததுவு மன்றி, விரும்பாயா சந்தனமா வரவுமிலை யெனக்கதறி மெலிவ ளிற்குத், திரும்பாயா சந்தனமேற் சே ரயா வாண்டியப்ப செயபூ மானே. (௩௫)

கனகவனப் பரியகுடங் களைநிகருங் கனமுலைதாங் காது மாமோ, கனகவனப் பரிகலங்கை கலந்தறியாள் மயல் மிகுத்துக் கலங்கு வாள்கோ, கனகவனப் பரிதுறுவ தனம லர்ச்சி யகமலர்ச்சி காணச் சேர்வாய், கனகவனப் பரிமலியு மிளசைநக ராண்டியப்ப கருணை மாலே. (௩௬)

விஞ்சாற்றுக் கவினிலங்கும் பரங்கிரியைத் தொழு மடியே மிடியென் ரேது, நஞ்சாற்றுக் கவிசனங்கொ ளாத ருள்செ யாண்டியப்ப நண்பா கன்னற், செஞ்சாற்றுக் கவிர

முதுக் கிணையாகுங் கழுகுமலைச் செவ்வேள் கோவைக்,
கெஞ்சாற்றுக் கவியனுப்பி னேமதனை யுனதுதந்தை யென்
போர் பாலும், (௩௭)

இருமருப்பு முலையருக்கு வெகுவிருப்ப முறமணக்கு
மினிய தேன, மருமருப்பு வெங்கணையெய் மாரனென வந்
துதித்து வணங்கா ரென்னும், வருமருப்பு வாரிதிக்கப் புற
முறச்செய் திளசைநகர் வாழுந் திவ்ய, தருமருப்பு னிதயனரி
யாம் நமது செல்லச் சாமிவரோ தயவேள் பாலும். (௩௮)

காட்டியதிற் பிழைகளிருந் தாலுமுறத் திருத்திபிடக்
கனிவாச் சொல்வாய், நாட்டியமின் னரிலங்கு சிவகங்கைக்
கின்றுசென்று நாலு நாளில், ஈட்டியபொன் மலிமதுரை
யுற்றிடுவேன் பின்புவர வெழுது வேனற்,றூட்டிகவா னென்
னவிளங் கியபுகழாண் டியப்பசர சப்பூ மானே. (௩௯)

நீலக்கந் தரனருள்சே ராண்டியப்ப ரஞ்சிதமா னே
யன் றாதா, லேலக்கந் தரமமைத்தும் வந்திலன்றூர் தந்தி
லன்யா னென்செய் வேன்செவ், வேலக்கந் தரளமென வே
பொழியப் பொழியாது மின்னுரேவி, சாலக்கந் தாதியினந்
தாங்காளென் றெருமொழிபோய்ச் சாற்று விரே. (௪0)

கருப்பஞ்சா றுங்கசந்து குமட்டியிடு மரிவைமுனங்
காமப் பாவி, அருப்பஞ்சா றுங்காங்கொண் டெய்யவந்தான்

றய்யதிரி பாதும் பாட்டில், விருப்பஞ்சா றங்கவெங்க ளாண்டியப்பா நீவரவே வேண்டுங் காலு, மருப்பஞ்சா றங் கணமுன் வேளையுமி ராவதனல் வரமாட் டாளே. (௪௧)

பூச்சுமைதா னத்தனையுங் கொண்டபடக் குறிக்கனி யெப் போதுங் கொண்டாள், வச்சுமைதா னந்தருமம் புரி நகரு மேககரு மெழுமே காம, மூச்சுமைதா னத்தெருவி லேகிடந்தாள் வருவனென மொழிந்து வாயோர், பேச்சுமைதா னத்தருநே ருங்கரங்கொள் ஆண்டியப்ப பெருமைக் கோவே.

அரசுவசந் தானமருங் கிள்ளையெனப் பேசுமென தருமைப் பெண்ணுங், கரசுவசந் தானமட வாருமிலே வே ளும்விடுத் தகலா னன்றிப். பரசுவசந் தானயமாப் பாடிவிளை யாடிரசம் பணையும் வெள்கிப், பரசுவசந் தானதரு வாண்டி யப்பன் பாலுமுருள பாவை தானே. (௪௩)

சங்காகங் காரினமா வெனுங்கனக்குந் தளவளமைச் சந்தக்காரிக், கிங்காகங் காமனம்பா [illegible] யினதுதொடை யீந்து சேர்ந்தித், தங்காகங் கா [illegible] ரேகதறி யுண்ணு வொன்றோர் தசைசையை யூட்டுப். [illegible] காகுலமேசு கரவ துலா வாண்டியப்ப சுகித [illegible] (௪௪)

ப [illegible] பிறன்வி [illegible] மதப் பாவியா [illegible] பதம்டி [illegible] ளிப் பாயுமிலேப் பழமெ [illegible] பான்பது, [illegible] மைந்தமியடுத்

தாண்டுநிலைப் பறச்செய் தைவர், பதம்படிய மாகிசமஞ் செய் தவனை ராண்டியப்பா பாலிப் பாயே. (௪௫)

கட்டினமத் தனைப்பொருவே ளேவிரித்து வாரிமுனங் கடையப் பாம்பாற், கட்டினமத் தனையமுலை யரைப்புனை ராண் டியப்பாநாம் கடனா லேப,கட்டினமத் தனையவிடு கிட் டியென வட்டிவரக் கண்டே மைந்தில், கட்டிமைத் தனை குறுகுந் தோகைதந்தா யேன்மிகச்சங் கடங்கொள் ளோமே.

கண்டங் கண்ட முடியாத கனிவா சகத்திக் கருளு ணைமீக், கண்டங் கண்ட மாமதியின் கவிகைக் காமன் பணி யிலுனைக், கண்டங் கண்ட போலெனவே காறி யுமிழ்வாள் பகைவர்களைக், கண்டங் கண்ட மாக்கிடுமென் கனவாண் டியப்ப மாமணியே. (௪௭)

எழுந்தப் புணரி முழக்குமத னேவிற் கலங்கி விழிப் புனற, வழுந்தப் புணரி னாரியரே வருந்து றுவரென் றேமடு வில், விழுந்தப் புணரி யெனப்பதுங்கு மின்னாட் கின்னாட் கனிந்துமுலை,யழுந்தப் புணரி னியகவிதை யணியாண் டியப்ப மாமணியே. (௪௮)

இதுமா தருமா லெனவிதுவுக் கிரங்கி யுறங்கி டாது நினைப், புதுமா தருமா னிடவடிவம் பொருந்திற் றெனவே கொடுத்திடுகைப், பதுமா தருமா வென்னைவெறுப் பதுமா

கருணை யென்பளனை, பொதுமா தருமா வலைபொருந்தப் புணராண் டியப்ப மாமணியே. (சகூ)

கொடுக்குஞ் சாரதி யாகதுங் காவனு கூல வாண்டியப் பேந்த்ரா விஜயனே, அடுக்குஞ் சாரதி யாமுனைக் கண்டுமா லாகி நாடுவள் வாடுவள் பன்னகக், கடுக்குஞ் சாரதி கோவா வெனுமிடைக் கன்னி பாலுவுந் தின்றுதன் கைமிசை, உடுக் குஞ் சாரதி காரிதெவ் வோதுறா லுள்ள வித்தை யனைத்தும் புரிவையே. (ருo)

பெருவி ருந்தைய ருந்தனல் போலுங்கு பேரன் வாட்டநன் காமனை நீங்கியே, தெருவி ருந்தைய னேபர னேயெனத் தேங்கியேங்கிப் புலம்பிநைந் தன்னைகாள், வருவி ருந்தைப ருங்களை முன்னமிவ் வாறு கண்டிருந் தா ரோவென் றோர்வள்சூழ்,தருவி ருந்தையவாவொடு பேணிள சைக்கு ளாண்டியப் பேந்த்ரநீ சேர்வையே. (ருக)

மோகப் பாவிக்கு நானென்ன செய்குவேன் முற்று மேவினை யேவினன் சர்க்கரைப், பாகப் பாவிக்குமேயென்று வாடுமிப் பாவை மேலுன்ன வாவைச் செலுத்துவாய்,மாகப் பாவிக்கும் பூகத்தின் மேல்வளர் வண்மை சூழிள சைத்துரை மார்கள்கண்,ணாகப் பாவிக்கு மந்திரி தந்திரி யான வாண்டியப் பேந்திர சிங்கமே. (ருஉ)

எந்த வித்தை யனைத்துந் தெரிந்துரை யெங்கள் ஆண் டியப் பேந்திரன் பானித,முந்த வித்தை யனை நினைத் தேமிக

மோகமீறி விவாகமுமின்றிய, சந்த வித்தை யனைவொடு மேவினாள் சாமி நீயினிக் காமத் தழுவிலை, வந்த வித்தை யணையரு வந்திட வாழ்வி யென்றுரைப் பாய்பசுங் கிள்ளையே.

நித்த ராசனு மாரிசி யாமயல் நீங்கி னார்பர மெம்முழுந் தாளும்வன், னத்த ராசனு மன்பனை யாங்கனி நங்கைக் கெங்ஙனம் போமனை யேவெது, சுத்த ராசனு மானங்கண் டோமெனச் சொல்வ தென்னவர்க் கின்றோ விளைசையு, நித்த ராசனு மெச்சாண்டி யப்பனைச் சேர்வை நீயுங்கண் டாவிரு திண்ணமே. (௫௪)

பந்தங் கொண்டலை மேவப் பயந்திடும் பார மாமுலைக் கன்னிமை நீபல, வந்தங் கொண்டலை நேர்பகம் விங்கவோ வாது சேரக் கருக்கொண்ட தென்றெனு, தந்தங் கொண்டலை மேலடித் தாளிதற் கைய மில்லைவந் தேமணஞ் செய்கொடைச், சந்தங் கொண்டலை யொக்கக் கவிக்கருள் சாமி யாண்டியப் பேந்திர பூமனே. (௫௫)

புல்ல வாதுவ ராமித மூாயெனப் போந்து மாரனுங் கெஞ்சுவ தன்றிமுன், வெல்ல வாதுவ ராதுநிற் பானந்த வேளை தான்வசந் தாபர சென்னவுண், டல்ல வாதுவ ராகமதையுரைத் தானு மஞ்சவி செய்வனிக் கன்னியை, வல்ல வாதுவ ராபுரி காத்தவா வள்ள லாண்டியப் பாவந்து சேர்கையே. (௫௬)

நேத்தி ரங்களைக் கண்டிகழ் நீலமே சேரு மாதர்கள்
சூழிள வைக்கனோன், ருத்தி ரங்களைக் கண்டிலி தாய்த்தரு
மண்ணை லாண்டியப் பேந்திர நீயருள், பூத்தி ரங்களைக் கண்
டின கள்ளனூர் புத்தி ரன்பொரப் பெற்றவன் பிள்ளைசற்,
பாத்தி ரங்களைக் கண்டிவை சேரிகை பாடு வாள்நட மாடுவள்
கூடவே. (௫௭)

வாதி யானனங் காமனு மேபொர வந்த நாள்முத லுன்
றிரு நாமமே, மாதி யானதங் கைக்கிது பொய்யல மாதி
யாகந்த ருந்துரை யேபொரு, தூதி யானனந் தஞ்சொல்லு
வேனென்று தோன்றி டாதணை யேற்றணை வாய்தசப்,
பாதி யானனம் பெற்றவர்க் கன்புசெய் பால வாண்டியப்
பேந்திர சிங்கமே. (௫௮)

தருவாயி தாகரவா ரிதியாகு முன்சமுகந் தனிலெண்
ணுளாம், ஒருவாயி தாவுரைத்துச் சென்றபடி வந்திலனை
யுருத்து நீபோய், வருவாயி தாவெனவே சினம்புரியேல்
நானுமரு மகவா மைய்யா, தருவாயி தாதையிவர் தேவெ
னக்கோ ளாண்டியப்ப குணபூ மானே. (௫௯)

சந்தக்கந் தப்பாவின் றாமுணரேன் மணியேயென்
சாமியேயென், சொந்தக்கந் தப்பாவென் றெவர்களுஞ்சொல்
லாண்டியப்பசு முகற் காப்பாய், இந்தக்கந் தப்பாம லேற்றசிவு

னெடும்பரங் குன் றிருந்தோய் தூளாய்ச்,சிந்தக்கந் தப்பாதத்
தெற்றுமிப முலைக்குறமான் சேருங் கோவே, (௬௰)

அரும்புலவா விச்சுமக்த பேரையும்பா டித்திரியா தழைத்தே யன்பாய்ப்,பெரும்புலவா நமைப்பாடென் றிருநிதியுந் தந்ததன்றிப் பிரிய மாயா,வரும்புலவா வென்றழைக்கு மடந்தையர்வே ளாண்டிப்ப மாறன் முன்னோன், விரும்புலவாக் கிழிதரும துரைக்கழைத்தென் றனக்குமகிழ் மிகச்செய் தானே, (௬௧)

திலகநியா யந்துரைமா ராசபுரி யிளசையெனுஞ் செழு நல் லூருக்,கிலகநியா சத்தொடையான் மந்திரிபோல் வந்து இத்தெவ் வியலுந் தேர்ந்து, வலகநியா னவரைமயக் காண்டியப்ப பூமனைய மானீ யென்னப், பலகநியார் வத்தொடுபெற் றுதவியெனக் கின்பரசம் பாலித் தானே. (௬௨)

நம்பரத்தை யரைக்கணையா லெய்தவனூற் சேர்கொடிக்கிந் நாட்டாய் மாரே, வம்பரத்தை யரைக்கவழித் திடக் கரைக்க நினைப்பர்பல வாறு நித்த, மும்பரத்தை யரைக் கணைக்கி லாதுபுணர்ந் திதைவெறுத்தல் முறையோ சேர் பொன், னம்பரத்தை யரைக்கணியாக் கவிஞர்களுக் கருளாண்டி யப்ப மாவே. (௬௩)

கரையுங் கடவா துலவுமளக் கரையு முரச மாக்குமனங், கரையு நிரையுந் திகழுமருங் கரையு நெருக்கி யணைகுவன சாத்; கரையுங் கனியுஞ் சினியுமே கரையும் படிதோத் திர மென்முரு, கரையும் பரையும் பகிர்ந்திடுதே கரையும் புரியுந் தமிழ் மாரன்; வரையுங் கொடையாய்க் கொண்டுமிசை வரையுந் திருவா யூதியுமை, வரையும் புரந்து வருமாத வரையு நிகராண்டிப் பஞுமே; வரையு மயக்கு மெழுந்தாணி வரையும் படித்தனனினித்து, வரையுஞ் சலியா தெழுகோடி வரையுங் கவிக ளெழுதுவனே. (கச)

தனிக்கவிகள் முற்றிற்று.





உ

சிவமயம்.

# எறிபத்தநாயனார்

## சரித்திரக் கீர்த்தனை.

இஃது

யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி மகாவித்வான்

நா. கதிரைவேற் பிள்ளையவர்கள்

விருப்பத்திற்கிணங்க

கருவூரிலிருக்கும்

கோயம்பள்ளி சுப்பிரமணியய்யர் குமாரர்

மகா-ா-ா-ஸ்ரீ வெங்கடசுப்பையரவர்கள்

இயற்றியதை

கருவூர் சைவமதபரிபாலன திருஞானசம்பந்த நிலையம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ கந்தசாமித்தம்பிரான் சுவாமிகளவர்களால்

கருவூர் "விவேகபாநு அச்சியந்திரசாலையிற்"

பதிப்பிக்கப்பட்டது.

1923.

